# أحكام الصيام
## اللغة التاميلية

# நோன்பின் சட்டங்கள்



**إعداد وترجمة:**

**شعبة توعية الجاليات في الزلفي**

الزلفي ١١٩٣٢ ت: ٠٦ ٤٢٢٥٦٥٧

فاكس: ٤٢٢٤٢٣٤ ص.ب: ١٨٢

தயாரிப்பு
ஜுல்:.பி வெளி நாட்டவர் அழைப்பு மையம்
த பெ நம் 182 அல் ஜுல்:.பி 11932
போன் – 06 4225657 .:.பாக்ஸ் 064224234
சஊதி அரேபியா

# أحكام الصيام - اللغة: التاميلية

الطبعة الأولى: ١٤١٧/٨ هـ.

ح شعبة توعية الجاليات بالزلفي ، ١٤١٧هـ

*فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر*

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات (الزلفي)

أحكام الصيام - الزلفي.

٢٤ ص ؛ ٨ × ١٢ سم

ردمك X - ٢٤ - ٨١٣ - ٩٩٦٠

(النص باللغة التاميلية)

١ . الصوم أ. العنوان

ديوي ٢٥٢,٣ ١٧/٢٠١٥

رقم الإيداع : ١٧/٢٠١٥

ردمك: X - ٢٤ - ٨١٣ - ٩٩٦٠

الصف والإخراج: شعبة توعية الجاليات في الزلفي

## يشتمل هذا الكتيب على:

حكم الصيام و فضائل رمضان
ثبوت دخول رمضان
من يرخص لهم الفطر
مفسدات الصوم وأشياء لا تفسد الصوم
تنبيهات مهمة   سنن الصوم
صلاة التراويح - صيام التطوع
الأيام التي يحرم صومها

நோன்பின் சட்டங்கள்
ரமழானின் சிறப்புகள்
ரமழானின் வருகை இரு காரியங்களால் உறுதியாகும்.
நோன்பு விட அனுமதிக்கப்பட்டவர்கள்
நோன்பை முறித்துவிடுபவை
நோன்பை முறிக்காதவை
நோன்பின் சுன்னத்துகள்
முக்கியக் குறிப்புகள்
தராவீஹ் தொழுகை
சுன்னத்தான நோன்பு
நோன்பு நோற்கக் கூடாத நாட்கள்
ஜகாதுல் ஃபித்ர்

# நோன்பின் சட்டங்கள்

ரமழான் மாதம் நோன்பு நோற்பது கடமை யாகும். அல்லாஹ் கூறுகிறான்: **உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ அவர் அம்மாதம் நோன்பு நோற்க வேண்டும்** (2:185). நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: இஸ் லாம் ஐந்து காரியங்கள் மீது அமைக்கப்பட் டுள்ளது.அவை வணக்கத்திற்குத் தகுதியான வன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில் லை என்றும் நிச்சயமாக முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதரென்றும் சாட்சி பகர்வது, தொழுகையை நிலை நிறுத்துவது, ஜகாத் கொடுப்பது, இறை இல்லத்தைத் தரி சிப்பது(ஹஜ் செய்தவது) ரமழான் மாதம் நோன்பு நோற்பது.

நோன்பு நோற்பது இஸ்லாமியக் கடமை களில் ஒன்றாகும்.

நோன்பு, அல்லாஹ்வின் பால் நெருங்குவ தற்காக உண்ணல், குடித்தல், உடலுறவு கொள்ளல் போன்றவற்றை அதிகாலை உதய மானது முதல் சூரியன் மறையும் வரை நோன் பை முறித்து விடும் காரியங்களை விட்டும் தன்னைத் தடுத்துக் கொள்வதாகும். இது புத்தி சுவாதீனமுள்ள, பருவ வயதை அடைந் த எல்லா முஸ்லிம் களுக்கும் கட்டாயமாகும்.

பருவ வயதை அடைவதென்பது, பதினைந்து வயது பூர்த்தியாகுவது அல்லது மறைவிடத்தில் முடி முளைப்பது அல்லது கனவில் இந்திரியம் வெளிப்படுவது போன்றவற்றால் ஏற்படுகிறது, பெண்ணுக்கு இன்னும் ஒருபடி அதிகமாக மாதவிடாய் ஏற்படுவது கொண்டும் ஏற்படுகிறது. எனவே ஒரு சிறுவனுக்கு இவற்றில் ஏதேனும் ஒன்று ஏற்பட்டுவிட்டால் அவன் பருவ வயதை அடைந்தவனாகிவிடுகிறான்.

## ரமழானின் சிறப்புகள்

அல்லாஹ் ரமழான் மாதத்தை அது அல்லாத மாதத்திற்கில்லாத பல சிறப்பம்சங்கள் கொண்டு சிறப்பித்துள்ளான்.

## அவற்றில் சில

1.நோன்பாளிகள் நோன்பு திறக்கும் வரை அவர்களுக்காக மலக்குகள் பாவமன்னிப்புத் தேடுகின்றனர்.

2.அல்லாஹ் தனது சுவர்க்கத்தை ஒவ்வொரு நாளும் அழகுபடுத்துகிறான், மேலும் (சுவர்க்கத்தை நோக்கி) எனது நல்லடியார்கள் தங்களின் கஷ்டங்களையும், சிரமங்களையும் தாங்கிக் கொண்டு உன்னிடம் வர இருக்கிறார்கள் எனக் கூறுகிறான் .

3.முரட்டுத்தனம் செய்யும் ஷைத்தான்கள் விலங்கிடப்படுகிறார்கள்.

4. ஆயிரம் மாதங்களைவிட சிறப்பான கண்ணி யமிக்க இரவு இதில் உள்ளது.
5. ரமழானின் கடைசி இரவில் நோன்பாளிக ளுக்கு மன்னிப்பு வழங்கப்படுகிறது.
6. ரமழானின் ஒவ்வொரு இரவிலும் அல்லாஹ் நரக விடுதலை வழங்குகிறான்.
7. ரமழானில் செய்கின்ற உம்ரா ஹஜ்ஜுக்குச் சமமாகும்.

ரசூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எவர் ரமழானில் ஈமானுடனும் நன்மையை நாடியவ ராகவும் நோன்பு நோற்கின்றாரோ அவர் முன் செய்த பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன. மே லும் கூறினார்கள். ஆதமுடைய மகனின் எல் லாச் செயல்களும் அவனுக்குரியதே, அவற் றில் ஒவ்வொன்றிற்கும் நன்மை பத்திலிருந்து எழு நூறு படங்குகள் வரை உள்ளன, நோன பைத் தவிர, ஏனெனில் நிச்சயமாக அந் நோன்பு எனக்குரியது, அதற்கு நானே கூலி கொடுப்பேன், அவன் தனது மனோ இச்சை. உணவு, குடிப்பு ஆகியவற்றை எனக்காகவே விட்டுவிட்டான் என அல்லாஹ் கூறுகிறான். நோன்பாளிக்கு இரு சந்தோஷங்கள் உள்ளன. ஒரு சந்தோஷம் அவன் நோன்பு திறக்கும் நேரம், மற்றொரு சந்தோஷம் அவன் தனது நாயனைச் சந்திக்கும் நேரம். அல்லாஹ்விடம்

நோன்பாளியின் வாயின் வாடை கஸ்தூரி வாடையை விட நறு மணமிக்கதாகும்.

## ரமழானின் வருகை இரு காரியங்களால் உறுதியாகும்.

1.ரமழான் பிறை பார்ப்பது: பிறை பார்க்கப்பட்டால் நோன்பு கட்டாயமாகிவிடும். (ஸல்) அவர்கள் கூறினார்கள்: பிறை பார்த்து நோன்பு பிடியுங்கள், பிறை பார்த்து நோன்பு விடுங்கள் (புகாரி, முஸ்லிம்). ரமழான் மாதம் உறுதி செய்யப்படுவதற்கு நீதமான ஒருவர் பிறை பார்ப்பது போதும், ஷவ்வால் பிறையைக் கண்டு நோன்பு விடுவதற்கு நீதமான இருவர் பிறை பார்ப்பது கட் டாயமாகும்.

உ.ஷஃபான் மாதத்தை முப்பது நாட்களா கப் பூர்த்தியாக்குவது. முப்பது நாட்கள் பூர்த்தியாகிவிட்டால், 31 ஆவது நாள் ரம ழானின் முதல் நாளாகும். (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நீங்கள் பிறை பார்க்க முடியாத அளவிற்கு மேகம் மூடிக் கொண்டால் நாட்களின் எண்ணிக்கையை முப்பதாகப் பூர்த்தியாக்கிக் கொள் ளுங்கள்.

## நோன்பு விடுவதற்கு அனுமதிக்கப்பட்டவர்கள்

1.நோயாளி: நோய் நீங்கிவிடுமென எதிர்பார்க்

கிறான் ஆயினும் நோன்பு நோற்பது அவனுக் குக் கஷ்டமாக உள்ளது, இப்படிப்பட்டவன் நோன்பை விட அனுமதிக்கப்படுகிறான், பின்னர் விடுபட்ட நோன்பைக் கழாச் செய்ய வேண்டும். எனினும் தனது நோய் நீங்கி விடு மென எதிர்பார்க்க முடியாத நிரந்தர நோயு டையவன் நோன்பு நோற்பது கட்டாயமில் லை அவன் ஒவ்வொரு நாளும் ஒரு ஏழைக் கு 550 கிராம் அளவு உணவு கொடுக்க வேண்டும் அல்லது அவன் விட்டு விட்ட நோன்பின் எண்ணிக்கை அளவிற்கு உண வு தயாரித்து, ஏழைகளுக்கு வழங்க வேண்டும்.

உ. பயணி: ஒரு பயணி தனது ஊரிலிருந்து புறப் பட்டுத் திரும்பிவரும் வரை நோன்பை விட்டுவிட அனுமதி அளிக்கப்படுகிறான். அவன் எந்த நோக்கத் திற்காகப் பயணம் செய்தானோ அந் நோக்கம் முடிந்த பின்னர் அங்கு தங்கி இருக்க வேண்டு மென்ற எண் ணமில்லாமல் அங்கு இருக்கும் வரை அவன் பயணத் திலேயே இருந்து கொண்டி ருக்கிறான். இப்பயணத்திற்குரிய தொலை தூரம் 80 கிலோ மீட்டரும் அதற்கு அதிக முமாகும். இது போன்றே ஒரு கர்ப்பஸ்திரி அல்லது பாலூட்டுபவள் தான் நோன்பு நோற்றால் தனக்கோ தனது குழைந்தைக் கோ இடையூறு ஏற்படுமெனப் பயந்தால்

நோன்பு விட அனுமதிக்கப்படுவாள். அக் கஷ்டம் நீங்கிவிட்ட பின்னர் விட்டுவிட்ட நோன்பைக் கழாச் செய்ய வேண்டும்.

3. முதியவர்: நோன்பு பிடிப்பது சிரமமாக இருந்தால் நோன்புவிட அனுமதி அளிக்கப் படுவார். இவருக்குக் கழாவும் கிடையாது. ஒவ்வொரு நாளும் ஒரு ஏழைக்கு உணவு கொடுக்க வேண்டும்.

## நோன்பை முறித்துவிடுபவை

1. **வேணுமென்றே உண்பது, குடிப்பது:** மறதி யாக உண்பது,குடிப்பது நோன்பை முறிக் காது. (ஸல்) அவர்கள் கூறினார்கள்: யாரே னும் மறந்தவராக உண்ணவோ, குடிக்க வோ செய்தால் அவர் நோன்பை அப்படியே பூர்த்தி செய்து கொள்ளட்டும். மூக்கு வழி யாக தண்ணீர் வயிற்றினுள் சேர்ந்து விடுவ தும் நரம்பு வழியாக உணவு, இரத்தம் செலுத்துவதால் நோன்பு முறிந்து விடும். ஏனெனில் இவை நோன்பாளிக்கு உணவூட் டுவது என்ற அர்த்தத்திலுள்ளவையாகும்.

2. **உடலுறவு கொள்தல்:** நோன்பாளி உடலு றவு கொண்டுவிட்டால் நோன்பு முறிந்து விடும். அவர் நோன்பைக் கழாச் செய்வது டன் அபராதம் கட்டாயமாகும். அபராதம் ஒரு அடிமையை உரிமைவிடுவது, அடிமை

யைப் பெற்றுக் கொள்ளவில்லையானால் தொடராக இரு மாதங்கள் நோன்பு நோற்க வேண்டும், இவ்விரண்டு மாதங்களில் மாதக் க அல்லது உணர்வுப்பூர்வமான காரணங்க ளின்றி நோன்பை விட்டுவிடக் கூடாது. மார்க்கக் காரணமென்பது இரு பெரு நாட் களும் அதை அடுத்து வரக்கூடிய அய்யா முத்தஷ்ரிக்கெனக் கூறப்படும் 11, 12, 13 ஆவது நாட்களுமாகும். உணர்வுப் பூர்வமா ன காரணமென்பது வியாதி. நோனபை விட வேண்டுமென்ற நோக்கமின்றி பயணம் செய் தல் ஆகியவையா கும். எக்காரணமுமின்றி இரு மாதங்கள் தொடராக நோனபு பிடிப்ப தை ஒருவன் விட்டுவிட்டால் – அது ஒரு நாளாயினும் சரி – தொடர் உணடாவதறகா க அவன மீண்டும் புதிதாகத் தொடாவது கடடாயமாகும. தொடராக நோனபு நோறக அவன சக்தி பெறவில்லையாயின் 60 ஏழை களுக்கு உணவு வழங்க வேண்டும்.

3. **இந்திரியத்தை வெளிப்படுத்துதல்** : முதத மிடுவது அல்லது சுய இன்பம் அடைவது போனற காரணங்களால் சுய விருபபட்டன இநதிரியத்தை வெளிப்படுததுவது. இப்படிச செய்பவன அபராதமின்றி நோன்பைக் கழாச் செயய வேண்டும். கனவில இந்தி ரியம் வெளிப்படுவதால் நோன்பு முறியாது.

4. **இரத்தத்தை வெளிப்படுத்துதல்:** சரீரத் திலிருந்து நரம்பு வழியாக இரத்தத்தை வெளிப்படுத்துதல் அல்லது இரத்த தானம் செய்வதற்காக இரத்தத்தை வெளிப்படுத் துதல். இரத்தப் பரிசோதனைக்காக எடுக் கப்படும் குறைவான இரத்தத்தால் நோன்பு முறியாது. இவ்வாறே பொன்னி மூக்கு உடை தல், காயம், பல் பிடுங்குதல் போன்ற சுய விருப்பமின்றி வெளியேறும் இரத்தம் நோன் பில் எவ்வித மாற்றத்தையும் ஏற்படுத்தாது.

5. **வாந்தி எடுத்தல்:** வேணுமென்றே வாந்தி எடுத்தால் நோன்பு முறிந்து விடும். சுயவிருப் பமின்றி வாந்திவந்தால் நோன்பு முறியாது. நோன்பை முறித்து விடும். இக்காரியங்களில் ஒன்றை நோன்பாளி – தெரிந்தவனாக, ஞாப கமுடன், வேணுமென்றே – செய்தால் அவ னது நோன்பு முறிந்துவிடும். மார்க்கச் சட் டத்தை அறியாதவனாக அல்லது நேரம் தெரியாதவனாக இருந்தால் அவன் அறியா தவன், மறதியாகச் செய்து விட்டான் என்ப தால் அவன் நோன்பு முறியாது. உதாரண மாக அதிகாலை ஆகவில்லை என எண்ணு வது அல்லது சூரியன் மறைந்து விட்டதென எண்ணுவது இன்னும் இது போன்றவற் றைச் செய்வது போல. இவ்வாறே ஒருவன் சுய விருப்பமின்றி, நிர்ப்பந்திக்கப்பட்டவ

னாகச் சாப்பிட்டிருந்தால் அவனது நோன்பு கூடிவிடும்.

6. **மாதவிடாய், பிரசவ இரத்தம் வெளிப் படுதல்:** ஒரு பெண் எப்போது மாதவிடாய், பிரசவ இரத்தத்தைக் காண்கிறாளோ அப்போதே அவளது நோன்பு முறிந்துவிடும். மாதவிடாய், பிரசவ இரத்தம் வந்தவர்கள் நோன்பு நோற்பது ஹறாமாக இருப்பது போல ரமழானுக்குப் பின்னர் அவர்கள் விட்ட நோன்புகளைக் கழாச் செய்வது கட்டாயமாகும்.

## 5. நோன்பை முறிக்காதவை

1. குளித்தல், நீந்துதல், வெப்பத்தைத் தனித்துக் கொள்ள தண்ணீர் கொண்டு குளிர்ச்சி அடைந்து கொள்ளுதல்.
2. அதிகாலை வந்துவிட்டதென உறுதியாகத் தெரிவது வரை உண்பது, குடிப்பது, உடலுறவு கொள்வது.
3. பல் துலக்கல் (மிஸ்வாக் செய்தல்) பகலில் மிஸ்வாக் செய்வதால் நோன் பிற்கு எந்தக் குறையும் ஏற்படாது. மட்டு மின்றி அப்படி மிஸ்வாக் செய்வது முஸ்தஹப்பான காரியங்களிலுள்ளதாகும்.
4. உணவல்லாத ஹலாலான எந்த மருந்து கொண்டும் வைத்தியம் செய்து கொள்வது.

உணவு (குளுக்கோஸ்) ஊசி அல்லாத ஊசி போட்டுக் கொள்வது கூடும். கண், காதில் சொட்டு மருந்திட்டுக் கொள்வது, அதன் ருசியைத் தொண்டையில் பெற்றுக் கொண்டாலும் சரி. சுவாச நெருக்கடியை நீக்குவதற்குரிய ஸ்ப்ரேயைப் பயன்படுத்துவதும் இது போன்று தான். வயிற்றினுள் ஏதும் சேர்ந்திடக் கூடாது என்ற நிபந்தனையுடன் உணவில் ருசிபார்ப்பதால் நோன்பு முறியாது. வாய் கொப்பளிப்பது, நாசிக்குத் தண்ணீர் செலுத்துவதில் குற்றமேதுமில்லை, எனினும் அவற்றால் ஏதும் வயிற்றினுள் சேர்ந்திடாத அளவுக்குக் கட்டுப்புச் செய்யக் கூடாது. இது போன்றே வாசனைப் பொருள்களை உபயோகிப்பதும் அவற்றை முகர்ந்து பார்ப்பதும் குற்றமில்லை.

5. மாதவிடாய், பிரசவ இரத்தம் வந்த பெண்களுக்கு இரவிலேயே இரத்தம் நின்று விட்டால் அதிகாலை உதயமானதற்குப் பின்னருள்ள நேரம் வரை குளிப்பதைப் பிற்படுத்திக் கொள்வது கூடும். பின்னர் அவ்விருவரும் ஃபஜ்ருத் தொழுகைக்காகக் குளித்துக் கொள்ள வேண்டும். பெருந் தொடக்குடையவனும் இது போன்றுதான்.

## நோன்பின் சுன்னத்துகள்

1. ஸஹர் செய்தல்:(ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஸஹர் உணவு உண்ணுங்கள் நிச்சயமாக ஸஹர் உணவில் பரக்கத்துள்ளது (புகாரி, முஸ்லிம்). ஸஹர் உணவை இரவின் கடைசி வரைப் பிற்படுத்துவது சுன்னத்தாகும். (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எனது உம்மத்தவர் நோன்பு திறப்பதைத் தீவிரப்படுத்தியும் ஸஹர் உணவை பிற்படுத்தியும் வரும் வரை நன்மையிலேயே இருந்து கொண்டிருக் கிறார்கள் (அஹ்மத்).

2. நோன்பு திறத்தல்: சூரியன் மறைந்து விட்டதென உறுதியாகத் தெரிந்து விட்டால் நோன்பு திறப்பதைத் தீவிரப்படுத்த வேண்டும். கனிந்த பேரீத்தம் பழம் கொண்டு நோன்பு திறப்பது சுன்னத், அது கிடைக்காதபோது சாதாரணப் பழம் கொண்டும் அதுவும் கிடைக்காதபோது தண்ணீர் கொண்டும் இவற்றில் ஏதும் கிடைக்காத போது எது கிடைக்கிறதோ அது கொண்டு நோன்பு திறப்பது சுன்னத்தாகும்.

3. துஆச் செய்தல்: நோன்பு நோற்றிற்கும் போது குறிப்பாக நோன்பு திறக்கும் சமயம் துஆச் செய்து கொள்ள வேண்டும். (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மூன்று துஆக்கள் ஏற்றுக் கொள்ளத்தக்கவையாகும். அவை,

நோன்பாளியின் துஆ, அநீதமிழைக்கப்பட்ட வனின் துஆ, பயணியின் துஆ (பைஹகி). நோன்பாளி இரவில் தொழுவது அவசியமா கும். (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ரமழா னின் இரவில் எவர் ஈமானுடனும் நன்மை யைத் தேடியவராகவும் நின்று வணங்குகிறா ரோ அவரது முன் சென்ற பாவங்கள் மன் னிக்கப்படுகின்றன. தராவீஹ் தொழுகை யை இமாமுடன் பூர்த்தி செய்வது அவசிய மாகும்.(ஸல்) அவர்கள் கூறினார்கள்: யார் தனது இமாமுடன், அவர் தொழுகையை முடித்துச் செல்கிறவரை தொழுகிறாரோ அவருக்கு இரவு முழுவதும் நின்று வணங் கிய நன்மை அவருக்குப் பதிவு செய்யப்ப டுகிறது. (சுனன் உடையவர்கள் இதை அறி விக்கிறார்கள்). இன்னும் ரமழானில் தர்மம் செய்வதை அதிகப்படுத்துவதும் அவசிய மாகும். (ஸல்) அவர்கள் கூறினார்கள்: தர்மங் களில் தலைசிறந்த தர்மம் ரமழானில் செய் யப்படும் தர்மமாகும் (திர்மதி). மேலும் ரமழா னில் குர்ஆன் ஓதுவதில் கவனம் செலுத்து தல் அவசியமாகும், ஏனெனில் ரமழான் குர் ஆன் மாதமாகும். குர்ஆன் ஓதுபவருக்கு ஒவ்வொரு எழுத்துக்களுக்கும் ஒரு நன் மையும், ஒரு நன்மைக்கு அது போன்ற பத்து மடங் குகளும் உண்டு.

## முக்கியக் குறிப்புகள்

1. ஒரு கா.:.பிர் ரமழானின் பகலில் இஸ்லா மாகிவிட்டால் மீதமுள்ள நேரத்தில் உண் பது, குடிப்பதைத் தடுத்துக் கொள்வது கட்டாயமாகும். அதை அவன் கழாச் செய்ய வேண்டியதுமில்லை.

2. நோன்பு வைப்பதாக இரவிலேயிலே எண் ணிக் கொள்வது கட்டாயமாகும். அது அதி காலைக்கு முன்புள்ள இரவின் எந்த நேரத் திலாயினும் சரி. இது :.பர் ழான நோன்பிற்கு மட்டும்தான். அன்னத், ந.:.பலான நோன்பிற கு அதிகாலை உதித்த பின்னரும் நிய்யத் வைத்துக் கொள்வது கூடும். அது சூரியன் உயர்ந்த பின்னராயினும் சரியே. ஆயினும் அவன் பகலில் ஏதும் உண்ணாமலிருப்பது நிபந்தனை யாகும்.

3. நோன்பாளி நோன்பு திறக்கும் நேரத் தில் தனக்குப் பிரியமானவற்றைத் துஆச் செய்து கொள்வது விரும்பத்தக்கதாகும்.(ஸல்) அவர்கள் கூறினார்கள்: நோன் பாளி நோன்பு திறக்கும் நேரத்தில் கேட்கும் துஆ மறுக் கப்படமாட்டாது. அல்லாஹும்ம லக்க சும்த்து வ அலா ரிஸ்கிக்க அ.:.ப்தர்த்து என்ற துஆ ஹதீஸில் வந்துள்ளது. பொருள்: இறைவா! உனக்காகவே நோன்பு நோற் றேன், உனது உணவு கொண்டே நோன்பு

திறந்தேன்.

4. பகலின் இடையில் நோன்பு வத்து விட்ட தென அறிந்துவிட்டவர் எஞ்சியிருக்கும் நேரத்தில் உண்பது, குடிப்பதைத் தடுத்துக் கொள்வதும் அதைக் கழாச் செய்வதும் கட்டாயமாகும்.

5. கழா நோன்புள்ளவர் – பொறுப்பை நீக்கிக் கொள்ள – தீவிரம் காட்டுவது விரும் பத்தக் கதாகும். பிற்படுத்துவதும் கூடும். விடுபட்ட நோன்புகளைத் தொடராகவோ விட்டு விட்டோ கழாச் செய்வது கூடுமென்பது போல மறு ரமழான் வரும் வரை எவ்விதக் காரண முமின்றி பிற்படுத்தக் கூடாது.

## தராவீஹ் தொழுகை

தராவீஹ் என்பது ரமழான் இரவில் ஜமா அத்தாகத் தொழும் ஒரு தொழுகையாகும். அதன் நேரம் இஷாத் தொழுகை தொழுததிலிருந்து அதிகாலை உதிக்கும் வரையுள்ள நேரமாகும். ரமாழான் இர வில் தொழும்படி (ஸல்) அவர்கள் ஆர்வமூட்டியுள்ளார்கள். தராவீஹ் தொழுகையின் சுன்னத்தான எண்ணிக்கை 11 ரக்அத்துகளாகும். ஒவ்வொரு இரு ரக்அத்துகளில் ஸலாம் கொடுத்துக் கொள்ள வேண்டும். 11 ரக்அத்துக்களுக்கு மேல் அதிகமாக்கினால் குற்றமில்லை. தராவீஹ் தொழுகை

நடத்துவதில் சுன்னத் –தொழுகையாளிக ளுக்குச் சிரமம் ஏற்படாத அளவில்– நீட்டி நிதானமாகத் தொழுவதாகும். குழப்பம் ஏற்ப டாதென்றிருக்குமானால் தராவீஹ் தொழு கைக்கு பெண்கள் பள்ளிக்கு வருவதில் குற்ற மில்லை, எனினும் அவர்கள் அழகலங்காரங்க ளை வெளிப்படுத்தாமலும் வாசனைப் பூசிக் கொள்ளாமலும் தங்களை மூடி மறைத்தவர்க ளாக வருவது நிபந்தனையாகும்.

## சுன்னத்தான நோன்பு

ரசூல் (ஸல்) அவர்கள் பின்வரும் நாட்க ளில் நோன்பு நோற்க ஆர்வமூட்டி, உற்சாகப் படுத்தியுள்ளார்கள்.

1. ஷவ்வால் மாத ஆறு நோன்புகள். (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒருவர் ரமழானில் நோன்பு நோற்று அதைத் தொடர்ந்து ஷவ் வாலில் ஆறு நோன்புகள் நோற்றால் அவர் காலமெல்லாம் நோன்பு நோற்றவர் போலா வார் (முஸ்லிம்)
2. பிரதி திங்கள், வியாழக் கிழமைகள்.
3. ஒவ்வொரு மாதத்திலும் மூன்று நாட்கள் அவை அய்யாமுல் பீழ நாட்களாகும் அதா வது மாதத்தின் 13, 14, 15 ஆகிய மூன்று நாட் களாகும்

4. முஹர்ரம் மாதத்தின் பத்தாம் நாள். இதற்கு முன்னாலுள்ள அல்லது பின்னாலுள்ள ஒரு நாள் சேர்த்து நோன்பு நோற்பது விரும்பத் தக்கதாகும்.
5. அர∴பா நாள். (துல் ஹஜ் மாதம் 9 ஆம் நாள்)

## நோன்பு நோற்கத் தடுக்கப்பட்ட (ஹராமான) நாட்கள்

1. நோன்புப் பெரு நாள், ஹஜ்ஜுப் பெரு நாள்.
2. தஷ்ரீக்குடைய மூன்று நாட்கள். அவை துல்ஹஜ் மாதத்தின்11, 12, 13 ஆகிய மூன்று தினங்களாகும். இச்சட்டத்திலிருந்து குர்பானிப் பிராணியைப் பெற்றுக் கொள்ளாத ஹஜ்ஜுக் கிரான், ஹஜ்ஜுத் தமத்து∴ செய்தவர்கள் விதிவிலக்குப் பெறுகிறார்கள்.
3. மாத விடாய், பிரசவ இரத்தமுடைய நாட்கள்.
4. கணவன் ஊரிலிருக்கும் சமயம் அவனது அனுமதியின்றி நோன்பு நோற்கக் கூடாது. (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒரு பெண் அவளது கணவன் ஊரிலிருக்கும் சமயம் அவனது அனுமதியின்றி ரமழான் அல்லாத காலங்களில் நோன்பு நோற்கக் கூடாது (புகாரி.முஸ்லிம்)

# زكاة الفطر
# ஜகாதுல் ஃபித்ர்

(ஜகாதுல் ஃபித்ர் என்பது ரமழான் நோன்பு நோற்றவர் வழங்க வேண்டிய ஒரு கட்டாய தர்மமாகும்)

ஜகாதுல் ஃபித்ர் முஸ்லிமான சிறியவர், பெரியவர் ஆண், பெண் அனைவர் மீதும் கடமையாகும். ஒருவர் அதை தனக்கும் தான் யாருக்கெல்லாம் சிலவு கொடுப்பது கட்டாயமாகுமோ அவர்களுக்கும் கொடுக்க வேண்டும்.

இது பெருநாள் பகல், இரவு சிலவுக்கு மேலதிகாக யாரிடத்தில் இருக்கிறதோ அவரின் மீது கட்டாயமாகும்.

ஜகாதுல் ஃபித்ர் நோன்பாளிக்கு அவரது நோன்பில் ஏற்பட்டுவிட்ட வீண், தவறு போன்றவற்றை தூய்மைப்படுத்தி விடும். இது ஏழைகளுக்கு பெரு நாள் உணவாகவும் நோன்பு,, இரவுத் தொழுகை இன் னும் இவையல்லாத நல்லறங்களை முழுமைப்படுத்துவதற்காக அல்லாஹ் அருளிய பாக்கியத்திற்காக நன்றி செய்வதை வெளிப்படுத்துவதுமாகும்.

இதன் அளவு இரண்டரைக் கிலோவாகும்.

இத்தர்மம் ஊரில் உணவாக பயன்படுத்தக் கூடிய மணிக் கோதுமை, தொழிக் கோதுமை,

பேரீத்தம் பழம், திராட்சைப் பழம், அரிசி போன்றவற்றிலிருந்து கொ டுக்க வேண்டும்.

இதற்கான கிரயத்தையோ அல்லது மனிதர்கள் உணவாக பயன் படுத்தாத ஆ டைகள், விரிப்புகள், பாத்திரங்கள் போன் றவற்றையோ கொடுப்பது கூடாது.

இதைக் கொடுப்பவர் கொடுக்கும் நேரத்தில் எந்த ஊரிலிருக்கிறாரோ அந்த ஊரின் ஏழைகளுக்குக் கொடுக்க வேண்டும். ஏழை, எளியவருக்கு மட்டுமே இது கொடுக்கப்பட வேண்டும்.

இதைக் கொடுப்பதற்கான நேரம் பெரு நாள் சூரியன் மறைந்ததிலிருந்து ஆரம்பமாகிறது. இதைக் கொடுப்பதற்கான சிறப்பான நேரம் பெரு நாள் தொழுகையின் சுபுஹ் நேரமும் பெரு நாள் தொழுகைக்கு முந்தியுள்ள நேரமுமாகும். காரணமின்றி பெரு நாள் தொழுகையை விட்டும் பிற்படுத்துவது கூடாது. அப்படி ஒருவர் காரணமின்றி பெரு நாள் தொழுகையை விட பிற்படுத்தினால் அது ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. அது சாதரணமாக கொடுக்கின்ற ஏனைய தர்மங்கள் போன்ற ஒரு தர்மமாக ஆகிவிடும். ஜகாதுல் ஃபித்ராக ஆகாது.

பெரு நாளிற்கு ஓரிரு நாட்கள் முன்னால் கொடுப்பது கூடும்.

ஒரே ஏழைக்கு பலரின் தர்மத்தைக் கொடுப்பது கூடும். இது பலரின் தர்மத்தை ஒரு பாத்திரத்தில் வைப்பது கூடு மென்பது போலாகும்.

அல்லாஹ் மிக்க அறிந்தவன்.